॥ श्रीः ॥

# ॥ श्रीकामाक्षी - सुप्रभातम् ॥

# ஸ்ரீ காமாக்ஷீ - ஸுப்ரபாதம்




**ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்**

4, பிரான்ஸிஸ் ஜோஸப்புத் தெரு,

சென்னை-600001

|| श्रीः ||

# || श्रीकामाक्षी सुप्रभातम् ||

# ஸ்ரீ காமாக்ஷீ ஸுப்ரபாதம்

ஸ்ரீராமஜெயம்
வைகாசி 14உ
அநந்தவல்லி



ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்
4, பிரான்ஸிஸ் ஜோஸப் தெரு, சென்னை-600 001.

முதற் பதிப்பு: 1974

# ஸ்ரீ காமாக்ஷீ ஸுப்ரபாதம்

ஸ்ரீ காமாக்ஷீ தேவியின் கருணையால்
ஸ்ரீ லக்ஷ்மீகாந்த சர்மா இயற்றியது.
நாகரத்திலும் தமிழிலும் மூலமும்
தமிழ் உரையுடனும் கூடியது.

விலை: 60 பைசா.

லிபர்ட்டி அச்சகம் சென்னை-600 001.

॥ श्रीः ॥

# ॥ श्री कामाक्षी - सुप्रभातम्

# ஸ்ரீ காமாக்ஷீ ஸுப்ரபாதம்

சில வருடங்களுக்கு முன் ஸ்ரீ லக்ஷ்மீகாந்த சர்மா அவர்கள், ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்கள் அநுக்ரஹத்துடன் எழுதிய ஸ்ரீ காமாக்ஷீ ஸுப்ரபாதம் என்கிற ஸம்ஸ்க்ருத ஸ்லோகங்களை எச். எம். வி. எல். பி. இசைத் தட்டில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி பக்தியுடன்கூடிய தம்முடைய இனிய குரலில் வழங்கியிருக்கிறார். இந்த மஹத்தான இசைத்தட்டு செப்டம்பர் மாதம் 8-ஆம் தேதி காலை காஞ்சியில் ஸ்ரீ காமாக்ஷீ அம்மன் கோயிலிலும், சிவாஸ்தானம் ஸ்ரீ பெரியவர்கள் சந்நிதியிலும் வெளியிடப்பட்டது. எல்லோரும் அதைக் கேட்டுப் பரவசமடைந்தார்கள். சென்னை—மயிலாப்பூர் ஸ்ரீ கற்பகாம்பாள் ஸமேத ஸ்ரீ கபாலீச்வரர் கோயிலிலும், அதே நேரத்தில் இந்தியாவில் பல முக்கிய நகரங்களிலும் இந்த இசைத்தட்டு வெளியீட்டு விழா நடந்தது.

ஸ்ரீ காமாக்ஷீ ஸுப்ரபாதம் இசைத் தட்டு விற்பனை மூலம் தமக்குக் கிடைக்கும் தொகையை (ராயல்டி) ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மி ஸ்ரீ காமாக்ஷீ அம்மன் கோயிலுக்கு அர்ப்பணிக்கிறார்.

பிரசுரகர்த்தர்.

ஸ்ரீ குருப்யோ நம:



श्रीमत्परमहंस परिव्राजकाचार्यवर्य-श्रीकाञ्ची-कामकोटिपीठाधि-
पति-जगद्गुरु-श्रीमच्चन्द्रशेखरेन्द्रसरस्वती महास्वामिनः

॥ श्रीः ॥

मुद्रा

श्रीमत्परमहंस परिव्राजकाचार्यवर्य
श्रीमच्छङ्करभगवत्पादप्रतिष्ठित
श्रीकाञ्ची कामकोटिपीठाधिप जगद्गुरु
श्रीमच्चन्द्रशेखरेन्द्रसरस्वती श्रीपादैः

आडुतुरै पेरुमाळ्कोविल्ग्रामाभिजन कृष्णशर्म-
तनूजाय श्रीलक्ष्मीकान्तशर्मणे क्रियते
नारायणस्मृतिः ।

भवता विरचितं श्रीकामाक्षीसुप्रभातनामकं स्तोत्ररत्नं श्रीकामाक्षी-रूपेण सर्वमङ्गलायाः गुणगणान् ललितपदगुम्फनेन वर्णयत् भवद्र-चितद्राविड्यनुवादयुतं च प्रतिदिनमनुसन्धानेन सर्वेषां मङ्गलावहं भूयादित्याशास्महे ।

विजययात्रास्थानम्,<br>
नूम्बल्.<br>
विकारि-आषाढ<br>
बहुल त्रयोदशी

नारायणस्मृतिः

ஸ்ரீ காமாக்ஷியை நம:



ஸ்ரீ காமாக்ஷீ அம்பாள்



# ॥ श्रीकामाक्षी सुप्रभातम् ॥

## ஸ்ரீ காமாக்ஷீ ஸுப்ரபாதம்

कामाक्षि देव्यम्ब तवार्द्रदृष्ट्या मूकः स्वयं मूककविर्यथाऽऽसीत् ।
तथा कुरु त्वं परमेशजाये त्वत्पादमूले प्रणतं दयार्द्रे ॥

காமாக்ஷி தேவ்யம்ப தவார்த்ர த்ருஷ்ட்யா
மூக: ஸ்வயம் மூககவிர் யதா(ஆ) ஸீத் ।
ததா குரு த்வம் பரமேஶஜாயே
த்வத்பாத மூலே ப்ரணதம் தயார்த்ரே ॥

उत्तिष्ठोत्तिष्ठ वरदे उत्तिष्ठ जगदीश्वरि ।
उत्तिष्ठ जगदाधारे त्रैलोक्यां मङ्गलं कुरु ॥ १ ॥

உத்திஷ்டோத்திஷ்ட வரதே உத்திஷ்ட ஜகதீஶ்வரி ।
உத்திஷ்ட ஜகதாதாரே த்ரைலோக்யாம் மங்களம் குரு ॥ 1 ॥

ஜகத்துக்குக் காரணமாயும், ஜகத்துக்கு ஈச்வரியாயுமுள்ள வரதையே! எழுந்திருந்து மூவுலகுக்கும் மங்களத்தைச் செய்யவேண்டும் (தாயே!) (1)

श्रृणोषि कच्चिद् ध्वनिरुत्थितोऽयं मृदङ्गभेरीपटहानकानाम् ।
वेदध्वनिं शिक्षितभूसुराणां श्रृणोषि भद्रे कुरु सुप्रभातम् ॥ २ ॥

ஶ்ருணோஷி கச்சித் த்வநி ருத்திதோ(அ)யம்
ம்ருதங்க பேரீ படஹாநகாநாம் ।
வேத த்வநிம் ஶிக்ஷித பூஸுராணும்
ஶ்ருணோஷி பத்ரே குரு ஸுப்ரபாதம் ॥ 2 ॥

மிருதங்கம், பேரீ, படஹம், ஆனகம் முதலியவற்றின் சப்தங்களும், பிராம்மணர்களின் வேதகோஷங்களும் கேட்கின்றன அல்லவா? எழுந்திருந்து ஸுப்ரபாதமாகச் செய்யுங்கள், தாயே! (2)

श्रृणोषि भद्रे ननु शङ्खघोषं वैतालिकानां मधुरं च गानम् ।
श्रृणोषि मातः पिककुक्कुटानां ध्वनिं प्रभाते कुरु सुप्रभातम् ॥३॥

ஶ்ருணோஷி பத்ரே நநு ஶங்க கோஷம்
வைதாளிகாநாம் மதுரம் ச காநம் ।
ஶ்ருணோஷி மாத: பிக குக்குடாநாம்
த்வநிம் ப்ரபாதே குரு ஸுப்ரபாதம் ॥ 3 ॥

தாயே! சங்கின் கோஷமும், ஸ்துதி பாடகர்களின் கானமும், கோழி கூவுவதும், குயிலின் சப்தமும் கேட்கின்றன அல்லவா? இது விடியற் காலை அல்லவா? ஆகையால் எங்களுக்கு ஸுப்ரபாதமாய்ச் செய்யுங்கள்.

मातर्निरीक्ष्य वदनं भगवान् शशाङ्को
लज्जान्वितः स्वयमहो निलयं प्रविष्टः ।
द्रष्टुं त्वदीयवदनं भगवान् दिनेशो
ह्यायाति देवि सदनं कुरु सुप्रभातम् ॥ ४ ॥

ஶாதர் நிரீக்ஷ்ய வதநம் பகவாந் ஶஶாங்கோ
லஜ்ஜாந்வித: ஸ்வயமஹோ நிலயம் ப்ரவிஷ்ட: |
த்ரஷ்டும் த்வதீய வதநம் பகவாந் திநேஶோ
ஷ்யாயாதி தேவி ஸதநம் குரு ஸுப்ரபாதம் ‖ 4 ‖

தாயே! தங்கள் முகத்தைப் பார்த்து வெட்கத்தை அடைந்தவனாய், சந்திரன் மறைந்துவிட்டான். ஆனால் சூரியன் தங்களைப் பார்க்கத் தங்கள் இருப்பிடத்தை நோக்கி வருகிறான். ஆகையால் (எழுந்திருந்து) எங்களுக்கு ஸுப்ரபாதமாகச் செய்யுங்கள். (4)

पश्याम्ब केचिद् धृतपूर्णकुम्भाः केचिद् दयार्द्रे धृतपुष्पमालाः ।
काचित् शुभाङ्ग्यो ननु वाद्यहस्ताःतिष्ठन्ति तेषां कुरु सुप्रभातम् ॥

பஶ்யாம்ப கேசித் த்ருத பூர்ணகும்பா:
கேசித் தயார்த்ரே த்ருத புஷ்பமாலா: |
காசித் ஶுபாங்க்யோ நநு வாத்யஹஸ்தா:
திஷ்டந்தி தேஷாம் குரு ஸுப்ரபாதம் ‖ 5 ‖

தாயே! சிலர் பூர்ண கும்பங்களுடனும், சிலர் புஷ்பமாலைகளுடனும், சில ஸ்த்ரீகள் வாத்தியங்களுடனும் நிற்பதைப் பாருங்கள். அவர்களுக்கு இன்று ஸுப்ரபாதமாகச் செய்யுங்கள். (5)

भेरीमृदङ्गपणवानकवाद्यहस्ताः स्तोतुं
महेशदयिते स्तुतिपाठकास्त्वाम् ।
तिष्ठन्ति देवि समयं तव काङ्क्षमाणा
ह्युत्तिष्ठ दिव्यशयनात् कुरु सुप्रभातम् ॥ ६ ॥

பேரீ-ம்ருதங்க-பணவாநக-வாத்ய-ஹஸ்தா:
ஸ்தோதும் மஹேஶதயிதே ஸ்துதிபாடகாஸ் த்வாம் |
திஷ்டந்தி தேவி ஸமயம் தவ காங்க்ஷமாணா
ஷ்யுத்திஷ்ட திவ்ய ஶயநாத் குரு ஸுப்ரபாதம் ‖ 6 ‖

ஸ்துதி பாடகர்கள் பேரி, மிருதங்கம், பணவம், ஆனகம் முதலிய வாத்தியங்களுடன் தங்களை ஸ்தோத்திரம் செய்வதற்காக, தங்கள் சமயத்தை எதிர்பார்த்தவர்களாய் நிற்கின்றார்கள். ஆகையால் படுக்கையை விட்டு எழுந்திருந்து ஸுப்ரபாதமாகச் செய்யுங்கள், தாயே! (6)

मातर्निरीक्ष्य वदनं भगवान् त्वदीयं
नैवोत्थितश्शशिधिया शयितस्तवाङ्के ।
संबोधयाशु गिरिजे विमलं प्रभातं
जातं महेशदयिते कुरु सुप्रभातम् ॥ ७ ॥

மாதர் நிரீக்ஷ்ய வதநம் பகவாந் த்வதீயம்
நைவோத்தித: ஶஶி தியா ஶயிதஸ் தவாங்கே ।
ஸம்போதயாஶு கிரிஜே விமலம் ப்ரபாதம்
ஜாதம் மஹேஶ தயிதே குரு ஸுப்ரபாதம் ॥ 7 ॥

தாயே! தங்கள் மடியில் சயனம் செய்துகொண்டிருக்கும் பரமேச்வரன், தங்கள் முகத்தைப் பார்த்துப் பூர்ணசந்திரன் என்றும், இன்னும் விடியற்காலம் வரவில்லை என்றும் நினைத்துத் தூங்கிக்கொண்டிருக்கிறார். ஆகையால் விடியற்காலம் ஆகிவிட்டது என்பதைச் சொல்லுங்கள். எங்களுக்கும் ஸுப்ரபாதமாகச் செய்யுங்கள். (7)

अन्तश्चरन्त्यास्तव भूषणानां
झलूझलूध्वनिं नूपुरकङ्कणानाम् ।
श्रुत्वा प्रभाते तव दर्शनार्थी
द्वारि स्थितोऽहं कुरु सुप्रभातम् ॥ ८ ॥

அந்தஃ் சரந்த்யாஸ் தவ பூஷணநாம்
ஜல் ஜல் த்வநிம் நூபுர-கங்கணநாம் ।
ஃ்ருத்வா ப்ரபாதே தவ தர்ஃநார்த்தீ
த்வாரி ஸ்திதோஹம் குரு ஸுப்ரபாதம் ॥ 8 ॥

தாயே! தாங்கள் அந்தப்புரத்தில் நடக்கும்போது, தாங்கள் அணிந்திருக்கும் ஆபரணங்கள், கால் சலங்கைகள் ஆகியவற்றின் ஜல் ஜல் சப்தங்களைக் கேட்டு, காலையில் எழுந்து தங்கள் தர்சனத்துக்காகக் காத்துக் கொண்டு இருக்கிறேன். எனக்கு ஸுப்ரபாதமாகச் செய்யவேண்டும். (8)

वाणी पुस्तकमम्बिके गिरिसुते पद्मानि पद्मासना
रम्भा त्वम्बरडम्बरं गिरिसुतां गङ्गा च गङ्गाजलम् ।
काळी ताळयुगं मृदङ्गयुगळं बृन्दा च नन्दा तथा
नीला निर्मलदर्पणं धृतवती तासां प्रभातं शुभम् ॥ ९ ॥

வாணீ புஸ்தக மம்பிகே கிரிஸுதே பத்மாநி பத்மாஸநா
ரம்பா த்வம்பர டம்பரம் கிரிஸுதா கங்கா ச கங்காஜலம் ।
காளீ தாளயுகம் ம்ருதங்க யுகளம் ப்ருந்தா ச நந்தா ததா
நீலா நிர்மல தர்ப்பணம் த்ருதவதீ தாஸாம் ப்ரபாதம் ஃுபம் ॥ 9 ॥

ஸரஸ்வதி புஸ்தகத்துடனும், லக்ஷ்மி தாமரையுடனும், ரம்பை வஸ்திரத்துடனும், கங்கை கங்கா ஜலத்துடனும், காளி தாளங்களுடனும் ப்ருந்தையும் நந்தையும் மிருதங்கங்களுடனும், நீலா தேவி நிர்மலமான கண்ணாடியுடனும் தங்கள் தர்சனத்துக்காக உபசார த்ரவ்யங்களுடன் நிற்பதால் அவர்களுக்கு ஸுப்ரபாதமாக ஆகின்றது. (9)

उत्थाय देवि शयनाद्भगवान् पुरारिः
स्नातुं प्रयाति गिरिजे सुरलोकनद्याम् ।

नैको हि गन्तुमनघे रमते दयार्द्रे
ह्युत्तिष्ठ देवि शयनात् कुरु सुप्रभातम् ॥ १० ॥

உத்தாய தேவி ஶயநாத் பகவாந் புராரி:
ஸ்நாதும் ப்ரயாதி கிரிஜே ஸுரலோக நத்யாம் ।
நைகோ ஹி கந்துமநகே ரமதே தயார்த்ரே
உத்திஷ்ட தேவி ஶயநாத் குரு ஸுப்ரபாதம் ॥ 10 ॥

தாயே, பரமேச்வரன் எழுந்திருந்து கங்கைக்கு ஸ்நானம் செய்யச் செல்லுகிறார். ஆனால் அவருக்குத் தனியாகச் செல்வதில் இஷ்டமில்லை. ஆகையால் எழுந்திருந்து ஸுப்ரபாதமாகச் செய்யுங்கள், தாயே! (10)

पश्याम्ब केचित् फलपुष्पहस्ताः केचित् पुराणानि पठन्ति मातः ।
पठन्ति वेदान् बहवस्तवाग्रे तेषां जनानां कुरु सुप्रभातम् ॥ ११ ॥

பஶ்யாம்ப கேசித் பலபுஷ்ப ஹஸ்தா:
கேசித் புராணநி படந்தி மாத: ।
படந்தி வேதாந் பஹவஸ் தவாக்ரே
தேஷாம் ஜநாநாம் குரு ஸுப்ரபாதம் ॥ 11 ॥

தாயே! சிலர் பழங்களுடனும், புஷ்பங்களுடனும் இருப்பதைப் பாருங்கள். சிலர் புராணங்களைப் படிக்கிறார்கள். சிலர் வேத பாராயணம் செய்கிறார்கள். அவர்களுக்கு ஸுப்ரபாதமாகச் செய்யுங்கள். (11)

लावण्यशेवधिमवेक्ष्य चिरं त्वदीयं
कन्दर्पदर्पदळनोऽपि वशङ्गतस्ते ।
कामारिचुम्बितकपोलयुगं त्वदीयं
द्रष्टुं स्थिताः वयमये कुरु सुप्रभातम् ॥ १२ ॥

லாவண்யஶேவதிம் அவேக்ஷ்ய சிரம் த்வதீயம்
கந்தர்ப்ப தர்ப்ப தளநோபி வஶங்கதஸ் தே ।
காமாரி-சும்பித-கபோலயுகம் த்வதீயம்
த்ரஷ்டும் ஸ்திதா: வயமயே குரு ஸுப்ரபாதம் ॥ 12 ॥

மன்மதனின் அழகு கர்வத்தை அடக்கியவராக இருந்தும், தங்கள் அழகைக் கண்டு வெகு காலம் தங்கள் வசமாகிவிட்டார் பரமேச்வரன். தாயே! காமனை ஜயித்த அவர் தங்கள் கன்னங்களில் முத்தம் கொடுத்தவர் அல்லவா? அப்படிப்பட்ட தங்கள் கன்னங்களைப் பார்க்க ஆவலுடன் காத்துக்கொண்டிருக்கும் எங்களுக்கு ஸுப்ரபாதமாகச் செய்யவேண்டும். (12)

गाङ्गेयतोयमवगाह्य मुनीश्वरास्त्वां
गङ्गाजलैः स्नपयितुं बहवो घटांश्च ।
धृत्वा शिरस्सु भवतीमभिकाङ्क्षमाणाः
द्वारि स्थिता हि वरदे कुरु सुप्रभातम् ॥ १३ ॥

காங்கேய தோய மவகாஹ்ய முநீஶ்வராஸ் த்வாம்
கங்காஜலை: ஸ்நபயிதும் பஹவோ கடாம்ஶ் ச ।
த்ருத்வா ஶிரஸ்ஸு பவதீம் அபிகாங்க்ஷமாணா:
த்வாரி ஸ்திதா ஹி வரதே குரு ஸுப்ரபாதம் ॥ 13 ॥

தாயே, அநேக மஹர்ஷிகள் கங்கையில் ஸ்நானம் செய்துவிட்டு, கங்கா ஜலத்தைக்கொண்டு தங்களுக்கு அபிஷேகம் செய்யவேண்டி, கங்கா தீர்த்தக் குடங்களைத் தலையில் சுமந்துகொண்டு தங்கள் வாசலில் நிற்கிறார்கள். ஆகையால் (அவர்களுக்கும்) ஸுப்ரபாதமாகச் செய்யுங்கள். (13)

मन्दारकुन्दकुसुमैरपि जातिपुष्पैः
मालाकृता विरचितानि मनोहराणि ।

माल्यानि दिव्यपदयोरपि दातुमम्ब
तिष्ठन्ति देवि मुनयः कुरु सुप्रभातम् ॥ १४ ॥

மந்தார-குந்த-குஸுமைரபி ஜாதி-புஷ்பை:
மாலாக்ருதா விரசிதாநி மநோஹராணி ।
மால்யாநி திவ்ய பதயோரபி தாதுமம்ப
திஷ்டந்தி தேவி முநய: குரு ஸுப்ரபாதம் ॥ 14 ॥

மந்தாரம், குந்தம், ஜாதி முதலிய புஷ்பங்களைக் கொண்டு மாலை கட்டுபவர் அழகாகப் புனைந்த மாலைகளைத் தங்களுக்கு அர்ப்பணம் செய்ய வேண்டுமென்று நிற்கிருர்கள் மஹர்ஷிகள். ஆகையால் தாயே! ஸுப்ரபாதமாகச் செய்ய வேண்டும். (14)

काञ्चीकलापपरिरम्भनितम्बबिम्बं
काश्मीरचन्दनविलेपितकण्ठदेशम् ।
कामेशचुम्बितकपोलमुदारनासां
द्रष्टुं स्थिताः वयमये कुरु सुप्रभातम् ॥ १५ ॥

காஞ்சீ கலாப-பரிரம்ப நிதம்ப-பிம்பம்
காச்மீர-சந்தந-விலேபித-கண்டதேசம் ।
காமேஶ-சும்பித-கபோலம் உதாரநாஸாம்
த்ரஷ்டும் ஸ்திதா: வயமயே குரு ஸுப்ரபாதம் ॥ 15 ॥

ஒட்டியாணம், சலங்கை இவற்றினுல் அலங்கரித்த இடுப்பையும், காச்மீரத்துச் சந்தனம் பூசிய கழுத்தையும், பரமேச்வரன் முத்தமிட்ட கன்னங்களையும், கம்பீரமான மூக்கையும் பார்க்க வேண்டுமென்று ஆவலுடன் நிற்கின்ற எங்களுக்கு ஸுப்ரபாதமாகச் செய்ய வேண்டும், தாயே! (15)

मन्दस्मितं विमलचारुविशालनेत्रं
कण्ठस्थलं कमलकोमळगर्भगौरम् ।
चक्राङ्कितं च युगळं पदयोर्मृगाक्षि
द्रष्टुं स्थिताः वयमये कुरु सुप्रभातम् ॥ १६ ॥

மந்த ஸ்மிதம் விமல சாரு விஶால நேத்ரம்
கண்டஸ்தலம் கமல கோமள கர்ப்ப கௌரம் ।
சக்ராங்கிதம் ச யுகளம் பதயோர் ம்ருகாக்ஷி
த்ரஷ்டும் ஸ்திதா: வயமயே குரு ஸுப்ரபாதம் ॥ 16 ॥

தாயே! உங்கள் புன்சிரிப்பையும், அழகாயும் நிர்மலமாயும் விசாலமாயும் உள்ள நேத்திரங்களையும், தாமரையைப் பரிகசிக்கும்படியான கழுத்தையும், சக்கர ரேகையுடன் கூடின சரணங்களையும் பார்க்க ஆவலுடன் காத்துக்கொண்டிருக்கும் எங்களுக்கு ஸுப்ரபாதமாகச் செய்யவேண்டும். (16)

मन्दस्मितं त्रिपुरनाशकरं पुरारेः
कामेश्वरप्रणयकोपहरं स्मितं ते ।
मन्दस्मितं विपुलहासमवेक्षितुं ते
मातः स्थिताः वयमये कुरु सुप्रभातम् ॥ १७ ॥

மந்தஸ்மிதம் த்ரிபுர நாஶகரம் புராரே:
காமேஶ்வர ப்ரணய கோப ஹரம் ஸ்மிதம் தே ।
மந்தஸ்மிதம் விபுலஹாஸ மவேக்ஷிதும் தே
மாத: ஸ்திதா: வயமயே குரு ஸுப்ரபாதம் ॥ 17 ॥

தாயே! பரமேச்வரனின் புன்சிரிப்பு, திரிபுரத்தை அழித்தது. தங்களுடைய புன்சிரிப்பு, பரமேச்வரனின் பிரணயகோபத்தை அழித்துவிடுகிறது. அத்தகைய தங்கள் புன்சிரிப்பையும் வாய்விட்டுச் சிரிப்பதையும்

பார்க்க ஆவலுள்ளவர்களாக நிற்கிறோம். எங்களுக்கு ஸுப்ரபாதமாகச் செய்ய வேண்டும். (17)

माता शिशूनां परिरक्षणार्थं न चैव निद्रावशमेति लोके ।
माता त्रयाणां जगतां गतिस्त्वं सदा विनिद्रा कुरु सुप्रभातम् ॥

மாதா ஶிஶூநாம் பரிரக்ஷணார்த்தம்
ந சைவ நித்ராவஶமேதி லோகே |
மாதா த்ரயாணாம் ஜகதாம் கதிஸ் த்வம்
ஸதா விநித்ரா குரு ஸுப்ரபாதம் ‖ 18 ‖

தாய் குழந்தைகளைக் காப்பாற்ற வேண்டி, தூங்காமல் விழித்துக் கொண்டிருக்கிறாள். உலகில் அப்படியிருக்க, மூவுலகுக்கும் தாயாராயும் கதியாயும் உள்ள தாங்கள் தூங்கலாகாது. எழுந்திருந்து (சிசுக்களான) எங்களுக்கு ஸுப்ரபாதமாகச் செய்யுங்கள். (18)

मातर्मुरारिकमलासनवन्दिताङ्घ्रयाः
हृद्यानि दिव्यमधुराणि मनोहराणि ।
श्रोतुं तवाम्ब वचनानि शुभप्रदानि
द्वारि स्थिताः वयमये कुरु सुप्रभातम् ॥ १९ ॥

மாதர் முராரி கமலாஸந வந்திதாங்க்ர்யா:
ஹ்ருத்யாநி திவ்ய மதுராணி மநோஹராணி |
ஶ்ரோதும் தவாம்ப வசநாநி ஶுபப்ரதாநி
த்வாரி ஸ்திதா: வயமயே குரு ஸுப்ரபாதம் ‖ 19 ‖

தாயே! பிரம்மதேவனாலும் நாராயணனாலும் நமஸ்கரிக்கப்பட்ட தங்களுடைய மதுரமானதும் மனோஹரமானதும் உண்மையானதும் மங்களத்தை உண்டு பண்ணக் கூடியதுமான சொற்களைக் கேட்கவேண்டுமென்று தங்கள் ஸந்நிதியில் நின்றுகொண்

டிருக்கிறோம். எங்களுக்கு ஸுப்ரபாதமாகச் செய்யுங்கள். (19)

दिगम्बरो ब्रह्मकपालपाणिः विकीर्णकेशः फणिवेष्टिताङ्गः ।
तथाऽपि मातस्तव देवि सङ्गात् महेश्वरोऽभूत् कुरु सुप्रभातम् ॥

திகம்பரோ ப்ரஹ்ம கபால பாணி:
விகீர்ணகேச: பணிவேஷ்டிதாங்க: |
ததாபி மாதஸ் தவ தேவி ஸங்காத்
மஹேச்வரோ(அ)பூத் குரு ஸுப்ரபாதம் ॥ 20 ॥

ஆகாசமே வஸ்திரமாயும், பிரம்மதேவனின் மண்டை ஓடு பிக்ஷாபாத்திரமாயும், ஸர்ப்பங்களை ஆபரணமாகவும் கொண்ட ருத்திரன் தலைவிரித்துத் திரிபவராக இருந்தும் உங்கள் சம்பந்தத்தால் மஹேச்வரரானார், தாயே! அப்படிப்பட்ட தாங்கள் (எங்கள் வறுமையை விலக்க முன்வந்து) ஸுப்ரபாதமாகச் செய்யுங்கள். (20)

अयि तु जननि दत्तस्तन्यपानेन देवि
द्रविडशिशुरभूद्वै ज्ञानसम्बन्धमूर्तिः ।
द्रविडतनयभुक्तक्षीरशेषं भवानि
वितरसि यदि मातः सुप्रभातं भवेन्मे ॥ २१ ॥

அயி து ஜநநி தத்த ஸ்தந்யபாநேந தேவி
த்ரவிடஶிஶுரபூத் வை ஜ்ஞாநஸம்பந்த மூர்த்தி: |
த்ரவிட தநய புக்த க்ஷீரசேஷம் பவாநி
விதரஸி யதி மாத: ஸுப்ரபாதம் பவேந் மே ॥ 21 ॥

தாயே! ஒரு தமிழ்க் குழந்தை தாங்கள் கொடுத்த பாலைக் குடித்து ஞானக்கடலாக ஞானசம்பந்த மூர்த்தி என்ற பெயருடன் விளங்குகிறார். அந்தக் குழந்தை

சாப்பிட்ட மிச்சத்தை எனக்குக் கொடுப்பாயேயானல் எனக்கு ஸுப்ரபாதம் ஆகும். (21)

जननि तव कुमारः स्तन्यपानप्रभावात्
शिशुरपि तव भर्तुः कर्णमूले भवानि ।
प्रणवपदविशेषं बोधयामास देवि
यदि मयि च कृपा ते सुप्रभातं भवेन्मे ॥ २२ ॥

ஜநநி தவ குமார: ஸ்தந்யபாந ப்ரபாவாத்
ஶிஶுரபி தவ பர்த்து: கர்ணமூலே பவாநி ।
ப்ரணவ பத விசேஷம் போதயாமாஸ தேவி
யதி மயி சக்ருபா தே ஸுப்ரபாதம் பவேந் மே ॥ 22 ॥

தாயே! தங்கள் குமாரர் சுப்பிரமணியர் தங்களுடைய ஸ்தன்ய பான ப்ரபாவத்தால் குழந்தையாக இருந்தும் ஸ்ரீ பரமேச்வரனுக்கு ப்ரணவ மந்திரார்த்தத்தை உபதேசித்தார். அப்படிப்பட்ட தங்களுடைய கிருபை எனக்குக் கிடைக்கும் பக்ஷத்தில் எனக்கு ஸுப்ரபாதம் உண்டாகும். (22)

त्वं विश्वनाथस्य विशालनेत्रा हालास्यनाथस्य नु मीननेत्रा ।
एकाम्रनाथस्य नु कामनेत्रा कामेशजाये कुरु सुप्रभातम् ॥ २३ ॥

த்வம் விஶ்வநாதஸ்ய விஶாலநேத்ரா
ஹாலாஸ்யநாதஸ்ய நு மீநநேத்ரா ।
ஏகாம்ரநாதஸ்ய நு காமநேத்ரா
காமேஶ ஜாயே குரு ஸுப்ரபாதம் ॥ 23 ॥

தாயே! விச்வேச்வரரிடம் (காசியில்) விசாலாக்ஷி என்றும், ஹாலாஸ்ய நாதரிடம் (மதுரையில்) மீனாக்ஷி என்றும், ஏகாம்ர நாதரிடம் (காஞ்சியில்) காமாக்ஷி

என்றும் விளங்குகிறீர்கள். அப்படிப்பட்ட தாங்கள் ஸுப்ரபாதமாகச் செய்யவேண்டும். (23)

श्रीचन्द्रशेखरगुरुर्भगवान् शरण्ये
त्वत्पादभक्तिभरितः फलपुष्पपाणिः ।
एकाम्रनाथदयिते तव दर्शनार्थी
तिष्ठत्ययं यतिवरो मम सुप्रभातम् ॥ २४ ॥

ஸ்ரீசந்த்ரசேகர குருர் பகவாந் ஶரண்யே
த்வத்பாத பக்திபரித: பலபுஷ்ப பாணி: ।
ஏகாம்ரநாத தயிதே தவ தர்ஶநார்த்தீ
திஷ்டத்யயம் யதிவரோ மம ஸுப்ரபாதம் ॥ 24 ॥

ஸ்ரீ சந்திரசேகரர் என்ற ஆசார்யர்கள் தங்கள் சரணங்களில் உள்ள பக்திப் பெருக்கால் தங்கள் தரிசனத்துக்காகப் பழங்களுடனும் புஷ்பங்களுடனும் காத்துக்கொண்டிருக்கிறார்கள். ஆகையால் இன்று எனக்கு ஸுப்ரபாதம். (24)

एकाम्रनाथदयिते ननु कामपीठे
सम्पूजिताऽसि वरदे गुरुशङ्करेण ।
श्रीशङ्करादिगुरुवर्यसमर्चिताङ्घ्रिं
द्रष्टुं स्थिताः वयमये कुरु सुप्रभातम् ॥ २५ ॥

ஏகாம்ரநாத தயிதே நநு காமபீடே
ஸம்பூஜிதாஸி வரதே குரு ஶங்கரேண ।
ஸ்ரீஶங்கராதி குருவர்ய ஸமர்ச்சிதாங்க்ரிம்
த்ரஷ்டும் ஸ்திதா: வயமயே குரு ஸுப்ரபாதம் ॥ 25 ॥

ஸ்ரீ காஞ்சி மடாதிபதிகள் பரிபாலனம் செய்து வரும் காமபீடத்தில் ஆதி சங்கரரால் ஆராதிக்கப்

பெற்றீர்கள். அந்த ஆதி சங்கரர் முதலான ஆசார்யர்கள் நமஸ்கரித்த தங்கள் சரணங்களைப் பார்க்க வேண்டுமென்று நிற்கிறோம், தாயே! ஸுப்ரபாதமாகச் செய்யுங்கள். (25)

दुरितशमनदक्षौ मृत्युसन्त्रासदक्षौ
चरणमुपगतानां मुक्तिदौ ज्ञानदौ तौ ।
अभयवरदहस्तौ द्रष्टुमम्ब स्थितोऽहं
त्रिपुरदलनजाये सुप्रभातं ममार्ये ॥ २६ ॥

துரித ஶமந தக்ஷௌ ம்ருத்யு ஸந்த்ராஸ தக்ஷௌ
சரண முபகதாநாம் முக்திதௌ க்ஞாநதௌ தௌ ।
அபயவரத ஹஸ்தௌ த்ரஷ்டுமம்ப ஸ்திதோஹம்
த்ரிபுர தளந ஜாயே ஸுப்ரபாதம் மமார்யே ॥ 26 ॥

பாவங்களைப் போக்கடிக்கக் கூடியவையும், யமனைப் பயப்படச் செய்யக்கூடியவையும், சரணங்களை அடைந்தவர்களுக்கு மோக்ஷத்தையும் ஞானத்தையும் கொடுக்கக்கூடியவையுமான தங்கள் அபயவரத ஹஸ்தங்களைப் பார்க்க ஆவலுள்ளவனாக இருக்கிறேன். இன்று எனக்கு ஸுப்ரபாதம், தாயே! (26)

मातस्त्वदीयचरणं हरिपद्मजाद्यैः
वन्द्यं रथाङ्गसरसीरुहशङ्खचिह्नम् ।
द्रष्टुं च योगिजनमानसराजहंसं
द्वारि स्थितोऽस्मि वरदे कुरु सुप्रभातम् ॥ २७ ॥

மாதஸ் த்வதீய சரணம் ஹரிபத்மஜாத்யை:
வந்த்யம் ரதாங்க-ஸரஸீருஹ-சங்க-சிஹ்நம் ।
த்ரஷ்டும் ச யோகிஜந-மாநஸ-ராஜஹம்ஸம்
த்வாரி ஸ்திதோ(அ)ஸ்மி வரதே குரு ஸுப்ரபாதம் ॥ 27 ॥

தாயே! பிரம்மதேவனாலும் நாராயணனாலும் நமஸ்கரிக்கத் தகுந்ததும், சங்கம் சக்ரம் தாமரை முதலிய ரேகைகளுடன் கூடினதும், யோகிகளின் ஹ்ருதயமாகிற மானஸ ஸரஸுக்கு ஹம்ஸமாக விளங்குகின்றவையுமான தங்கள் சரணங்களைப் பார்க்க ஆவலுடன் தங்கள் ஸந்நிதியில் நிற்கிறேன். இன்று ஸுப்ரபாதமாய்ச் செய்யுங்கள். (27)

पश्यन्तु केचिद्वदनं त्वदीयं स्तुवन्तु कल्याणगुणांस्तवान्ये ।
नमन्तु पादाब्जयुगं त्वदीयं द्वारि स्थितानां कुरु सुप्रभातम् ॥

பஶ்யந்து கேசித் வதநம் த்வதீயம்
ஸ்துவந்து கல்யாணகுணாம்ஸ் தவாந்யே ।
நமந்து பாதாப்ஜ யுகம் த்வதீயம்
த்வாரி ஸ்திதாநாம் குரு ஸுப்ரபாதம் ॥ 28 ॥

சிலர் தங்களுடைய முகத்தைத் தரிசிக்கட்டும். மற்றும் சிலர் தங்களுடைய குணங்களைக் கொண்டாடட்டும். மற்றும் சிலர் தங்கள் பாதங்களில் நமஸ்கரிக்கட்டும். தாயே! அவர்களுக்கு முன் நின்று அவர்களுக்கு ஸுப்ரபாதமாகச் செய்யுங்கள். (28)

केचित् सुमेरोश्शिखरेऽतितुङ्गे केचिन्मणिद्वीपवरे विशाले ।
पश्यन्तु केचित्त्वममृताब्धिमध्ये पश्याम्यहं त्वामिह सुप्रभातम् ॥

கேசித் ஸுமேரோஶ் ஶிகரே (அ)திதுங்கே
கேசித் மணித்வீப வரே விஶாலே ।
பஶ்யந்து கேசித் த்வமம்ருதாப்தி மத்யே
பஶ்யாம்யஹம் த்வாம் இஹ ஸுப்ரபாதம் ॥ 29 ॥

தாயே! தங்களைச் சிலர் மேரு பர்வதத்தின் உச்சியில் பார்க்கட்டும். சிலர் மணித்வீபத்தில் போய்ப்

பார்க்கட்டும். சிலர் அம்ருதஸமுத்ர மத்தியில் தர்சிக்கட்டும். நான் தங்களை இங்கே தர்சிக்கிறேன். (எனக்கு) ஸுப்ரபாதம். (29)

शम्भोर्वामाङ्कसंस्थां शशिनिभवदनां नीलपद्मायताक्षीं
श्यामाङ्गां चारुहासां निबिडतरकुचां पक्वबिम्बाधरोष्ठीम् ।
कामाक्षीं कामदात्रीं कुटिलकचभरां भूषणैर्भूषिताङ्गीं
पश्यामस्सुप्रभाते प्रणतजनिमतामद्य नः सुप्रभातम् ॥ ३० ॥

ஶம்போர் வாமாங்க-ஸம்ஸ்தாம் ஶஶிநிப-
வதநாம் நீலபத்மாயதாக்ஷீம்,
ஶ்யாமாங்காம் சாரு ஹாஸாம் நிபிடதர குசாம்
பக்வ பிம்பாதரோஷ்ட்டீம் |
காமாக்ஷீம் காமதாத்ரீம் குடிலகச பராம்
பூஷணைர் பூஷிதாங்கீம்,
பஶ்யாமஸ் ஸுப்ரபாதே ப்ரணத ஜநிமதாம்
அத்ய நः ஸுப்ரபாதம் ॥ 30 ॥

பரமசிவனின் வாமபாகத்தில் வீற்றிருப்பவளும், சந்திரனைப் போல் முகமுடையவளும், நீலத் தாமரையைப் போலுள்ள கண்களுடையவளும், நீலவர்ணமான சரீரமுடையவளும், மந்தஹாஸத்துடன் கூடியவளும், நெருக்கமான குசபாரங்களையுடையவளும், கோவைப் பழம் போல் சிவந்த உதடுகளை யுடையவளும், விரும்பியவற்றைக் கொடுப்பவளும், சுருண்ட கூந்தல் உடையவளும், ஸர்வாபரணங்கள் உடையவளுமான ஸ்ரீ காமாக்ஷியைக் காலையில் நாம் தர்சிக்கிறோம். அவளுடைய சரணங்களில் நமஸ்கரிக்கிற நமக்கு இன்று ஸுப்ரபாதம். (30)

कामप्रदा कल्पतरुर्विभासि नान्या गतिर्मे ननु चातकोऽहम् ।
वर्षस्यमोघाः कनकाम्बुधाराः काश्चित्तु धाराः मयि कल्पयाशु ॥

காமப்ரதா கல்பதருர் விபாஸி
நாந்யா கதிர் மே நநு சாதகோ(அ)ஹம் ।
வர்ஷஸ்யமோகா: கநகாம்புதாரா:
காஶ்சித்து தாரா: மயி கல்பயாசு ॥ 31 ॥

விரும்பியவற்றைக் கொடுப்பவராயும், பூமியில் கல்பக விருக்ஷமாயும் விளங்குகின்றீர். கனக வர்ஷங்களை வர்ஷித்துக்கொண்டிருக்கிறீர். நானே ஒரு சாதக பக்ஷி; தங்களைத் தவிர வேறு கதி எனக்குக் கிடையாது. அத்தகைய கனக வர்ஷங்களில் எனக்கும் கொஞ்சம் கிடைக்கச் செய்யவேண்டும், தாயே! (31)

त्रिलोचनप्रियां वन्दे वन्दे त्रिपुरसुन्दरीम् ।
त्रिलोकनायिकां वन्दे सुप्रभातं ममाम्बिके ॥ ३२ ॥

த்ரிலோசந ப்ரியாம் வந்தே வந்தே த்ரிபுர ஸுந்தரீம் ।
த்ரிலோக நாயிகாம் வந்தே ஸுப்ரபாதம் மமாம்பிகே ॥ 32 ॥

த்ரிலோக நாயகியும், பரமேச்வர பத்தினியும், த்ரிபுவன ஸுந்தரியுமான தங்களை நமஸ்கரிக்கிறேன்; இன்று எனக்கு ஸுப்ரபாதம், தாயே! (32)

## कृतज्ञता

कामाक्षि देव्यम्ब तवार्द्रदृष्ट्या कृतं मयेदं खलु सुप्रभातम् ।
सद्यः फलं मे सुखमम्ब लब्धं तथा च मे दुःखदशा गता हि ॥

காமாக்ஷி தேவ்யம்ப தவார்த்ர த்ருஷ்ட்யா
க்ருதம் மயேதம் கலு ஸுப்ரபாதம் |
ஸத்ய: பலம் மே ஸுகமம்ப லப்தம்
ததா ச மே துக்கதசா கதா ஹி ‖ 33 ‖

காமாக்ஷி தேவியே! உங்கள் கிருபையால் இந்த ஸுப்ரபாதம் என்னுல் செய்யப்பெற்றது. உடனே கொஞ்சம் ஸுகம் கிடைத்தது; கஷ்டம் விலகியது, தாயே! (33)

प्रार्थना

ये वा प्रभाते पुरतस्तवार्ये पठन्ति भक्त्या ननु सुप्रभातम् ।
शृण्वन्ति ये वा त्वयि बद्धचित्तास्तेषां प्रभातं कुरु सुप्रभातम् ॥

யே வா ப்ரபாதே புரதஸ் தவார்யே
படந்தி பக்த்யா நநு ஸுப்ரபாதம் |
ஶ்ருண்வந்தி யே வா த்வயி பத்தசித்தா:
தேஷாம் ப்ரபாதம் குரு ஸுப்ரபாதம் ‖ 34 ‖

தாயே! விடியற்காலையில் தங்கள் ஸந்நிதியில் பக்தியுடன் எவர் இந்த ஸுப்ரபாதத்தைப் படிக்கிருர்களோ, எவர் கேட்கிருர்களோ, அவர்களுக்கு எப்பொழுதும் ஸுப்ரபாதமாகச் செய்யுங்கள், தாயே! (34)

சுபம்.

ஸ்ரீ சந்த்ரமௌலீச்வராய நம:

# ஸ்ரீ காமகோடி கோசஸ்தானத்தின்

## சில முக்கிய வெளியீடுகள்

ஒவ்வொரு புத்தகமும் ஸ்ரீ ஆசார்யர்களுடைய
அநுக்ரஹ பூர்வகமான ஸ்ரீமுகத்துடனும் கூடியது.

| | | ரூ.பை. |
|---|---|---|
| 1. | ஸ்ரீ பஜகோவிந்தம்—ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ் அனுவாதமும் .... .... .... | 0—80 |
| 2. | ஸ்ரீ முகுந்தமாலா—ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ் உரையும் கூடியது .... .... .... | 0—60 |
| 3. | ஸ்ரீ ப்ரச்னோத்தர ரத்னமாலிகா—ஸ்ரீ சங்கரபகவத்பாதர் இயற்றியது (தமிழ் லிபியில்) .... .... .... | 0—60 |
| 4. | ஸ்ரீ மூகபஞ்சசதீ—ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழுரையுடனும் .... .... .... | 2—50 |
| 5. | தேவீ ஸ்தோத்ர ரத்னாகரம்—12 தேவீ ஸ்தோத்ரங்கள் அடங்கியது, ஸம்ஸ்க்ருதம் தமிழில் மூலமும், தமிழ் அர்த்தத்துடனும் (அச்சில்) .... .... ... | 2—00 |
| 6. | ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்—தேவநாகரி, தமிழ் லிபிகளில் மூலமும், தமிழ் அனுவாதமும் .... | 2—50 |
| 7. | ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரமும், நாமாவளியும்—ஸம்ஸ்க்ருதத்தில் .... .... | 0—60 |
| 8. | —ஷை—தமிழில் ச்லோகமும், நாமாவளியும்.... .... | 0—50 |
| 9. | ஸ்ரீசிவபாதாதி கேசாந்த வர்ணனம் முதலிய ஐந்து சிவ ஸ்தோத்ரங்கள்—ஸம்ஸ்க்ருத ஸ்தோத்ரமும் தமிழ் அனுவாதமும் .... .... .... | 1—75 |
| 10. | விஷ்ணு பாதாதி கேசாந்த ஸ்தோத்ரம்—ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ்—ஆங்கில அனுவாதங்களும் .... | 1—50 |
| 11. | ஸ்தோத்ர பஞ்சகம் .... .... .... | 0—70 |
| 12. | மாத்ருகா புஷ்பமாலா ஸ்துதி—ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ் அனுவாதமும் .... .... .... | 0—62 |
| 13. | ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம்—ஸ்ரீ ஸுரேச்வராசார்யர்களின் மானஸோல்லாஸ வார்த்திகத்துடன் கூடியது | 1—75 |
| 14. | ருத்ரம் சமகம்—ஸம்ஸ்க்ருதத்தில் .... ... | 1—00 |
| 15. | ஆத்மார்ப்பண ஸ்துதி—ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் இயற்றியது ஸம்ஸ்க்ருத ஸ்தோத்ரமும், தமிழில் மூலமும் அர்த்தத்துடன் .... .... .... | 1—50 |
| 16. | ஸ்ரீ பஜன ரத்னாகரம்—ஸம்ஸ்க்ருதம் தமிழிலும் கிட்டத்தட்ட 900 கீர்த்தனங்கள் கொண்டது. இது ஒரு பஜனைப் பொக்கிஷம் ... .... | 12—00 |

**ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்**

**4, பிரான்ஸிஸ் ஜோஸப்புத் தெரு, சென்னை-600 001**